# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 10 | தமிழ் மாத இதழ் | • December 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 10 | • டிசம்பர் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-


## இரட்டையர்



"மன உணர்ச்சிகளை நிர்வகிக்கத்தேவை இல்லை. அவை அப்படித்தான் ஏற்படும்" என அதற்கு சுதந்திரம் வழங்குவது ஒன்றே, நம் சித்தத்திற்கு காட்டும் சரியான வழிகாட்டலாகும்.

- ஸ்ரீ பகவத்



மனதை, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கு பகுதிகளாகப் பிரித்து ஆன்மிக நூலோர் விளக்குகின்றனர்.

அவை பற்றி நாமும் சில கட்டுரைகளில் பார்த்திருக்கிறோம். அவற்றிலும், மனம் மற்றும் புத்தி பற்றி அதிகமாகப் பார்த்துள்ளோம்.

இங்கு நாம் அவற்றை சித்தம் என்னும் பகுதியோடு இணைத்துப் பார்க்கப் போகிறோம்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான இயல்பு உண்டு. அந்த இயல்பை தான் சித்தம் என்று குறிப்பிடுகிறோம்.

இந்த சித்தம் எவ்வாறு செயல்படுகிறது?

தமிழ் புலவர்களுள், இருவரை இரட்டையர் எனக் கூறுவதுண்டு.

அவர்களில் ஒருவர் பார்வையற்றவர். இன்னுமொருவர் நடக்க முடியாமல் ஊனமுற்றவர்.

பார்வையற்ற புலவர் திடகாத்திரமானவர். ஆகவே அவர் நடக்கமுடியாமலிருக்கும் அடுத்த புலவரைத் தனது தோள்களின்மீது ஏற்றிச் சுமந்து கொண்டு செல்வார்.

நடக்க முடியாத புலவருக்கு பார்க்கும் சக்தி தெளிவாக இருந்தது. ஆகவே அவர் போக வேண்டிய இடத்துக்கு வழியைக் காட்டுவார். அவர் காட்டும் வழியில், அவர் கூறும் திசையில் பார்வையற்றவர் நடந்து செல்லுவார்.

பாதை எப்படி இருக்கிறது, வீடு எங்கே இருக்கிறது என அனைத்தையும் தோளில் உட்கார்ந்திருப்பவர் பார்த்து, சுமப்பவரிடம் கூறுவார். "நேராகச் செல், வலது பக்கமாக திரும்பிச் செல்; இடது பக்கமாகத் திரும்பிச் செல்" என முடமானவர் கூறுகின்றபடியெல்லாம், பார்வையற்றவர் நடந்து செல்வார்.

அவர்கள் செல்லும் பாதையில் பாறாங்கல் ஒன்று நீட்டிக் கொண்டிருக்கிறது.

"நாம் இப்படியே நடந்துசென்றால் பாறாங்கல்லின் மீது இடறிக்கொள்வோம். ஆகவே இடது பக்கமாக ஓரடி நகர்ந்து நடந்து செல்" என மேலே உள்ளவர் கூறுகிறார்.

அதைப் பின்பற்றி கீழே உள்ளவரும் நடந்து செல்கிறார். இதனால் பார்வையற்ற அவர், பாறாங்கல்லில் இடறாமல் சரியான முறையில் நடந்து செல்கிறார். பார்வையுள்ள ஒருவர் எவ்வாறு தடுமாற்றம் இல்லாமல் நடந்து செல்வாரோ அவ்வாறு அவராலும் நடந்து செல்ல முடிகிறது.

அவர்கள் காட்டுப்பாதையில் நடந்து செல்கிறார்கள். பாதையின் இடது ஓரத்தில் நிற்கும் மரத்தின் கிளை, பாதையில் சற்றுத் தாழ்வாகப் படர்ந்து நிற்கிறது. அவர்கள் அப்படியே நேராக நடந்து செல்வார்களேயானால் அவர்கள் அந்த மரக்கிளையில் இடித்து கொள்வார்கள்.

அவர்கள் பாதையிலிருந்து இரண்டடி வலது பக்கமாக நகர்ந்து நடந்து செல்வார்களேயானால் அவர்கள் அந்த மரக்கிளையின் மீது இடித்துக் கொள்ளத் தேவையில்லை. அதனை மேலே உள்ளவர் கூற, கீழே உள்ளவரும் இதனைப் பின்பற்றி நடக்க, இருவரும் மரக்கிளையில் இடித்துக் கொள்ளாமல், சரியான முறையில் நடந்து செல்லுகின்றனர்.

அவர்கள் அந்த பாதையில் தொடர்ந்து நடந்து செல்லுகின்றனர். இப்போது அவர்களுக்கு எதிராக காட்டு யானையொன்று வேகமாக நடந்து வருகிறது.

"ஆபத்து, ஆபத்து! காட்டு யானை ஒன்று ஓடி வருகிறது!" என்று மேலே உள்ளவர் குரல் கொடுக்கிறார்.

காட்டு யானையிடமிருந்து எப்படித் தப்பியோட வேண்டும்? அது இருவருக்குமே தெரியாது. ஆனால் தனியாக ஓடி வரும் காட்டு யானை ஆபத்தானது என்பது மட்டும் தெரிகிறது. அவர்கள் என்ன செய்வார்கள்? என்ன செய்ய வேண்டும்?

ஆபத்து, ஆபத்து, என்றதும் கீழே உள்ளவர் கேட்கிறார் : "நான் என்ன செய்ய வேண்டும்?"

"தெரியாது! ஆனால் இங்கிருந்து ஓடிப் போய் விடு".

"எந்தப் பக்கம் ஓட வேண்டும்?"

"எங்கேயாவது ஓடு! நிற்காமல்!

- இப்படி இருவருக்கும் இடையில் உரையாடல் நிகழ்ந்தால்

கண் தெரியாதவர் என்ன செய்வார்?

அவருடைய செயலில் ஒழுங்கு இருக்குமா? அவர் தனது செயலை, செய்ய வேண்டிய முறைப்படி செய்ய முடியுமா?

அவர் எங்கே ஓடுவார்? பார்வையில்லாத அவரால் எப்படித் தாறுமாறாக ஓட முடியும்? குழி இருப்பதும் தெரியாது; புதர் இருப்பதும் தெரியாது.

இந்தக் கண் தெரியாத குருடர் வேறு எவருமல்ல, அவர்தான் நமது சித்தம்.

- அது தான் நமது இயல்பு.

பார்வை இருந்தும் நடக்க முடியாமலிருக்கும் அடுத்தவர்தான் நம்முடைய புத்தி அல்லது அறிவு.

சித்தத்தினால் செயல்பட முடியும்; ஆனால் எப்படி செயல்பட வேண்டும் என்பது தெரியாது. சித்தம் தான், பார்வையற்றவர்.

நம்முடைய புத்திக்கு, என்ன செய்ய வேண்டும் என்பது தெரியும்; ஆனால் செயல்படும் ஆற்றல் அதற்குக் கிடையாது. புத்திதான், நடக்க முடியாத முடமானவர்.

நாம் உணவு விடுதிக்குச் செல்கிறோம்.

ஒருவர் ஐஸ்கிரீம் சாப்பிடுவதைப் பார்க்கிறோம். அதைப் பார்த்ததும், நமக்கும் ஐஸ்கிரீம் சாப்பிட வேண்டுமென்ற ஆர்வம் ஏற்படுகிறது. அதைப் பார்த்ததும் நமக்கு ஆர்வம் ஏற்பட்டது போல் தோன்றுகின்றது.

ஆனால் அதற்கும் முன்னால் சில நிகழ்வுகள் நடந்து விட்டிருக்கின்றன.

ஐஸ்கிரீமைப் பார்த்ததும், நம்முடைய அறிவு ஐஸ்கிரீமின் சுவையை கற்பனை செய்து பார்க்கிறது. "இந்த சுவையின் அனுபவம் மீண்டும் கிடைத்தால் நன்றாக இருக்கும்" என நம் அறிவு கூறுகிறது.

நம் அறிவு வழி காட்டியதும், நமது சித்தம் ஐஸ்கிரீம் சாப்பிடும் ஆர்வத்தைத் தூண்டுகிறது. ஆர்வம் ஏற்படுகிறது.

நம் அறிவு வேறுவிதமாகச் சிந்திக்கவும் சாத்தியம் உள்ளது.

"ஐஸ்கிரீம் சாப்பிட்டால் அதன் சுவை நன்றாகத்தான் இருக்கும். ஆனால் அந்த ஐஸ்கிரீம், நம்முடைய பழுதடைந்த பல்லின் மீது பட்டதானால் வலி, உயிர் போய் விடும்".

-இப்படி நாம் சிந்திப்போமானால் அதன் பொருள் என்ன?

ஐஸ்கிரீமை ஒருபுறம் விரும்பினாலும், இன்னுமொருபுறம் வெறுக்கவும் செய்கிறோம்.

இந்நிலையில் அறிவு என்ன முடிவை எடுக்கும்?

அறிவு சரியாக முடிவெடுக்க முடியா விட்டால்

நமது சித்தத்திலிருந்து எந்த ஆர்வமும் வெளிப்படாது.

அறிவு வழிகாட்டினால் மட்டுமே சித்தம் செயல்படும்.

அந்த அறிவும், ஐஸ்கிரீம் சாப்பிட்டால் நன்றாக இருக்கும் என பொதுவான முடிவை எடுத்தால் கூட, சித்தம் செயல்படாது.

நம் அறிவோடு அகங்காரம் எனும் இன்னுமொரு பகுதியும் இணைய வேண்டும்.

"ஐஸ்கிரீம் சாப்பிட்டால் அது "எனக்கு" நன்றாக இருக்கும்" என

நம் அறிவின் முடிவு, அகங்காரம் என்னும் தன்மையோடு இணைந்திருக்கும் போது தான்

அறிவின் முடிவு, அறிவின் முடிவாக இருக்கும்.

அறிவும், அகங்காரமும், இயற்கையாகவே ஒன்றோடு ஒன்று இணைந்து கொள்ளும். ஆகவே அதனை இணைக்க நாம் முயலத் தேவையில்லை.

யானை உதாரணத்துக்கு மீண்டும் வருவோம்.

"யானையிடமிருந்து தப்ப வேண்டும். நாம் ஆபத்திலிருக்கிறோம்", என்பதை மட்டும் அறிவு கூறுகிறது.

ஆனால் என்ன செய்யவேண்டும் என்பதை அறிவு கூறவில்லை. ஏனெனில் எவ்வாறு தப்பிச் செல்ல வேண்டும் என்ற விபரம் அறிவுக்குத் தெரியாது.

இப்போது நமது சித்தம் என்ன செய்யும்?

ஆபத்திலிருந்து தப்பி ஓடுவதற்கு நமக்கு என்னவெல்லாம் தேவைப்படும்?

பயமோ, பதட்டமோ ஏற்பட்டால் தான் நாம் ஆபத்திலிருந்து தப்பிச் செல்வோம்.

பயமோ, பதட்டமோ ஏற்படாத பட்சத்தில் நாம் தப்பியோடும் முயற்சியை கூட எடுக்க மாட்டோம்.

இதனால் நமது சித்தம், பயத்தையும், பதட்டத்தையும் ஏற்படுத்துகிறது.

ஆனால் பயத்தையும், பதட்டத்தையும் எடுத்துக் கொண்டு எப்படி செயல்படுவது என்பது அறிவுக்குத் தெரியவில்லை.

இதனால் நமது செயல் தாறுமாறாக அமைந்து விடுகிறது.

அன்பர் ஒருவர் தனக்கு ஏற்பட்ட அனுபவம் ஒன்றை விவரித்தார்.

அவருடைய தகப்பனாருக்கு திடீரென நெஞ்சுவலி ஏற்பட்டதால் மருத்துவமனைக்குக் கூட்டிச் சென்றிருக்கிறார். பலவிதமான சோதனைகளை எடுத்துள்ளனர். அவருடைய தந்தைக்கு ஏற்பட்ட பிரச்சினையை ஓரளவு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரும் வரை

அவர் மிகுந்த மனப்பதட்டத்துடன் இருந்திருக்கிறார்.

அவர் கேட்கிறார்: "தங்களுடைய கருத்தில் எனக்கு தெளிவு ஏற்பட்ட நிலையில், நான் மிகுந்த மன அமைதியுடன் தான் இருந்து வந்தேன். எனது தகப்பனாருக்கு ஏற்பட்ட பிரச்சினையை எதிர்கொள்ளும்போது என் மனம் அமைதியை இழந்து விட்டது. எனக்கு ஏன் இவ்வாறு நிகழ்ந்துள்ளது? என்னுடைய மனதிலிருந்த அமைதி மறைந்து, எனக்கு ஏன் இப்படி பதட்டம் வந்தது?".

அவருக்கு என்ன நிகழ்ந்துள்ளது?

அவருடைய அறிவு எப்படி செயல்பட்டுள்ளது?

அவருடைய சித்தம் எப்படி செயல்பட்டுள்ளது?

அந்த அன்பரின் வீட்டில் இத்தகைய நிகழ்வு இப்போதுதான் முதன்முறை நிகழ்ந்துள்ளது. மருத்துவமனை, மருத்துவப் பரிசோதனைகள் என அவர் ஏதோ ஒன்றில் ஈடுபட நேர்ந்துள்ளது. அதுபற்றி அவர் ஏதோ சில முடிவுகளை எடுக்க வேண்டியதுள்ளது.

ஆனால் அவர் எடுக்கும் முடிவுகள் சரியானதா, இல்லையா என்பது அவருக்கே தெரியாது.

அத்தகைய நிலையில் அவரது சித்தம் பயத்தையும், பதட்டத்தையும் வெளியிடத்தான் செய்யும்.

இப்போது - இந்நிலையில் நாம் என்ன செய்ய வேண்டும்? எப்படிச் செயல்பட வேண்டும்?

அவர் என்ன செய்திருந்தால் அவரது சித்தம் அமைதியை வெளிப்படுத்தும்?

இப்படிதான் நாம் ஒவ்வொருவருமே நமக்குத் தெரியாத செயல்களில் ஈடுபட வேண்டியதாகிறது. புதுவகையான பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியதாகிறது.

இப்படி புது வகையான பிரச்சினைகளை எதிர்கொண்டால் மனப்பதட்டம் ஏற்படுவது தவிர்க்க முடியாதா?

முன்பின் தெரியாத ஒன்றில் ஈடுபடுவது தான் பதட்டத்தை ஏற்படுத்துகிறதா?

நாம் நமது நெருங்கிய உறவினரை இவ்வாறு மருத்துவப் பரிசோதனைக்கு அழைத்துச் செல்வதாக வைத்துக் கொள்வோம். இப்படி அழைத்துச் செல்வதால் மட்டும் பதட்டம் ஏற்படுவதில்லை. தெரியாத செயலில் புதிதாக ஈடுபடுவதால் பதட்டம் ஏற்படுவதில்லை.

அப்படி நாம் புதிய செயலில் ஈடுபடும் போது, நமக்கு ஏற்படும் "என்ன ஆகுமோ, ஏது ஆகுமோ?" என்ற எண்ணந்தான் பதட்டத்தை ஏற்படுத்துகிறது.

இப்படியொரு எண்ணம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமா?

உண்மையில் இத்தகைய சூழ்நிலையில் இத்தகைய எண்ணம் ஏற்படுவதும் இயற்கையே.

நாம் வழக்கமாகப் பார்க்கும் உதாரணத்தையே இங்கு எடுத்துக் கொள்ளலாம்.

இரவு நேரத்தில், புதர் நிறைந்த பாதையில் நாம் நடந்து செல்ல வேண்டியுள்ளது. சரியான வெளிச்சமும் இல்லை.

இதனால் நமக்கு "பாம்பு ஏதாவது இருக்குமோ?" என்ற எண்ணம் ஏற்பட்டு நமக்கு பயத்தை உருவாக்குகிறது.

இதனால் நாம் டார்ச் விளக்கை உபயோகித்து, கவனமாக நடக்கிறோம்.

"பாம்பு இருக்குமோ?" என்ற எண்ணமோ, பயமோ நமக்கு ஏற்படாத பட்சத்தில் நாம் இப்படி ஜாக்கிரதையாக நடக்க மாட்டோம். பாம்பின் மீது கூட காலை வைத்து விடுவோம்.

நாம் ஜாக்கிரதையாகச் செயல்பட்ட பிறகும், "பாம்பு இருக்குமோ, பாம்பு வந்து விடுமோ?" என்ற எண்ணம் மீண்டும் மீண்டும் வந்தால் அந்த எண்ணத்துக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்கத் தேவையில்லை.

இன்னும் ஓர் உதாரணம்.

நாம் நமது நண்பர் ஒருவருக்கு பணம் கொடுத்து உதவி செய்கிறோம். இதனால் அவர் தனது தொழிலில் ஏற்பட்ட நெருக்கடியிலிருந்து மீண்டு விடுகிறார்.

நாம் அவருக்குச் செய்த மகத்தான உதவிக்கு நன்றி சொல்வதற்காக அவர் நம்மைத் தேடி வருகிறார்.

அவர் நம்மைத் தேடி வரும் சமயத்தில் நாம் நமது கம்ப்யூட்டரில், முக்கியமான ஒரு கடிதத்தை டைப் செய்து கொண்டிருக்கிறோம்.

அவர் நம் அருகில் அமர்ந்து நாம் செய்த உதவிக்காக, நம்மை வெகுவாகப் பாராட்டுகிறார். நாமும் நமது வேலையைச் சற்று நிறுத்திக் கொண்டு அவரது பாராட்டுகளுக்கு செவி கொடுக்கிறோம்.

ஆனால் அவர் தனது பாராட்டுகளை நிறுத்துவதாக இல்லை. அவரை அப்படியே அனுமதித்தால் அவர் அன்று முழுவதும் நம்மை பாராட்டிக் கொண்டு தான் இருப்பார்.

நாம் செய்த உதவிக்கு நன்றி சொல்வது அவரது கடமை தான். ஆனால் அவர் தனது நன்றியுரையை நிறுத்தாத பட்சத்தில் நாம் என்ன செய்வது? நாம் என்ன செய்வோம்?

அவர் நம்மைத் திட்டுவாரேயானால், நாம் அவரை விரட்டி அனுப்பி விடலாம். ஆனால் அவர் நம்மைப் புகழ்ந்து, புகழ் மாலையாகச் சூட்டிக் கொண்டிருக்கிறார். போதும், போதுமென்று கூறினாலும் கேட்பதாயில்லை. இந்நிலையில் நாம் என்ன செய்வோம்? அவரை அவர் பாட்டுக்குப் பேச விட்டுவிட்டு நாம் செய்யும் டைப்பில் ஈடுபட்டு விடுவோம்.

ஆரம்பத்தில் அவர் பேச்சைக் கேட்பதற்காக நமது வேலையைக் கூட சற்று நிறுத்தி வைத்திருந்தோம். இப்போது அவரை அவர் பாட்டுக்குப் பேச விட்டுவிட்டு, நாம் பாட்டுக்கு நமது வேலையில் ஈடுபட ஆரம்பித்து விட்டோம்.

நம் மனது இப்படி தேவையான மற்றும் தேவையில்லாத செய்திகளைக் கொண்டு வரத்தான் செய்யும். அது நமது சித்தத்தில் தேவையற்ற தூண்டுதல்களைக் கூட ஏற்படுத்தத்தான் செய்யும்.

அதுதான் இயற்கை என ஏற்றுக் கொள்வது தான் அதனைக் கடந்து செல்வதற்கான ஒரே வழி.

நமது உணர்வுகளுக்கு நாம் அனுமதியும் சுதந்திரம் கொடுக்கும் போது அவை, தாமாக வந்தது போல் தாமாகவே மறைந்து விடும். தேவையற்ற உணர்வுகள் சம நிலைக்கு வந்துவிடும்.

"இதுவரை நிம்மதியாக இருந்த எனக்கு இப்படி பயமும், பதட்டமும் ஏற்படுகிறதே" என்று நம்முடைய அறிவு கூறினால் அதன் பொருள் என்ன?

"என்னை எப்படி நிர்வகிப்பது என்று தெரியவில்லையே" என்பது தான் பொருள். "என்னை நிர்வகிக்க விரும்புகிறேன். ஆனால் என்னை எப்படி நிர்வகிக்க வேண்டும் என்பது தெரியவில்லை" என்பது தான் பொருள்.

இங்கும் நம்முடைய அறிவால் சரியாக வழிகாட்ட முடியவில்லை.

"மன உணர்ச்சிகளை நிர்வகிக்கத் தேவையில்லை; அவை அப்படித்தான் ஏற்படும்" என அதற்கு சுதந்திரம்

வழங்குவது ஒன்றே நாம் நமது சித்தத்துக்கு காட்டும் சரியான வழிகாட்டலாகும்.

"பதட்டத்திலிருந்து விடுபட வேண்டும்" என நம் அறிவு ஒரு கோரிக்கையை வைக்குமேயானால்

அது சம்பந்தமாகவும், நமது சித்தம் பதட்டத்தைதான் ஏற்படுத்திவிடும்.

நமது மன உணர்ச்சிகள் சம்பந்தமாக

நமது அறிவு எந்தக் கோரிக்கையும் வைத்திடாத நிலையில் அது சம்பந்தமாக நம்முடைய சித்தமானது மீண்டும் மீண்டும் உணர்ச்சிகளை அனுப்பத் தேவையில்லை.

செயல்களைச் சீரமைக்க நமது சித்தமானது உணர்ச்சிகளை உருவாக்கிக் கொடுக்கலாம்.

ஆனால் உணர்ச்சிகளைச் சீரமைக்க நமது சித்தமானது உணர்ச்சிகளை உருவாக்கிக் கொடுக்கத் தேவையில்லை.

"எந்த உணர்ச்சி வந்தாலும்,

வந்து விட்டுப் போகட்டும். சும்மா இருப்பதே நமது வேலை"

- என உணர்ச்சிகளைப் பொறுத்து வழி காட்டுவது ஒன்றே அறிவின் வேலை.



## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

வாழ்க்கையில் நாம் சந்திக்கும் சூழ்நிலைகளும் சந்தர்ப்பங்களும் நாம் விரும்பியவாறே அமைவது கிடையாது. அது நமது கைவசம் இல்லை. இது அவரவர் பிராப்தம் பிரகாரம் அமைகிறது. ஒரு வேலையை செய்வதற்கு அல்லது ஒரு பிரச்சினையை தீர்ப்பதற்கு நாம் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் நமக்கு ஏற்டும் சூழ்நிலைகள் நமக்கு சாதகமாக அமையாவிட்டால் நாம் வருத்தப்படுகிறோம்; சோர்ந்து போய் விடுகிறோம்.

சாதகமாக அமைவதும் பாதகமாக அமைவதும் நம் கைவசம் இல்லை. ஆனால் அச்சூழ்நிலையை எவ்வாறு எதிர்கொள்வது, அச்சூழ்நிலையில் எவ்வாறு செயல்படுவது என்பது நம் கைவசம்தான் உள்ளது. செயல்படும் சுதந்திரம் என்பது நம்மிடம் தான் உள்ளது. எவ்வளவு மோசமான சூழ்நிலையாக இருந்தாலும் அதை நல்லவிதமாகவும் எதிர்கொள்ளலாம் அல்லது உணர்ச்சி வசப்பட்டு மோசமான செயல்களாலும் எதிர்கொள்ளலாம்.

நம் கைவசம் இருக்கும் இந்த செயல்தான் நம் எதிர்காலத்தை நிர்ணயிக்கிறது. இதுவே ஆகாமிய கர்மா. நமக்கு எவ்வளவு மோசமான சூழ்நிலை ஏற்பட்டாலும் அச்சூழ்நிலையை நாம் சரியான நல்ல செயல்கள் மூலம் எதிர்கொள்வதே சிறப்பாக எதிர்கொள்வதாகும். இது நம் கைவசம் மட்டுமே உள்ளது. இதைத்தான் பகவத் ஐயா

"ஆகாமியத்தின் அதிகாரம் நம் கைவசம் மட்டுமே உள்ளது. அதற்கான அதிகாரம் தெய்வத்திற்கு கூட கிடையாது" என்று கூறுகிறார். எனவே தான் அகத்தை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது என புரிந்து கொண்ட நாம், நம் கைவசம் இருப்பது செயல்.....செயல்....செயல்.... என்பதையும் நன்றாக புரிந்துகொள்கிறோம். நமது நல்ல செயல்களே நல்ல விளைவுகளை கொடுக்கும்.

அந்த வகையில் இந்த ஞானப் புரிதலை மற்றவர்களிடம் கொண்டு சேர்ப்பது என்பதும் மிக உயர்ந்த செயலாகும். எல்லாத் தடைகளையும் மீறி எந்த எதிர்பார்ப்பும்மின்றி தேடுதல் உள்ள அனைவருக்கும் கொண்டு சேர்ப்பது என்பது ஆகாமியத்தையும் விட உயர்ந்த கர்மாவாகிய நிஷ்காமிய கர்மாவாகும்.

அந்த வகையில் சிங்கப்பூர் ஞானமுகாமிற்கும் சிறப்புரை கூட்டங்களுக்கும் பெருமுயற்சி எடுத்து ஏற்பாடு செய்து நடத்திய திரு. கார்த்திகேயன், சிவசுப்ரமணியன், பாலமுருகன் அவர்களுக்கும், அவர்களுக்கு உறுதுணையாக இருந்து செயல்பட்ட திரு. பாலகிருஷ்ணன், ராம்குமார், இராதாகிருஷ்ணன், பிரபாகரன் மற்றும் அனைத்து நண்பர்களுக்கும் நமது பகவத் மிஷன் சார்பில் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

புரிந்துகொள்வோம்..... தொண்டாற்றுவோம்.

அன்புடன்,
K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஸ்ரீ பகவத் மிஷன் சிங்கப்பூர் மையம்

சிங்கப்பூரில் பகவத் ஐயாவின் நூல்களையும் விபரங்களையும் பெற மற்றும் கலந்துரையாடலில் ஈடுபட கீழ்கண்ட பகவத் மிஷன் அன்பர்களுடன் தொடர்பு கொள்ளலாம்.

திரு. கார்த்திகேயன், Ph : +6598005807, +6591223060
திரு. சிவசுப்ரமணியன், Ph : +6583768354



# ஓஷோவின் பார்வையில் ஞானம் - விடுதலை என்பது அனுபவத்தை கடந்தது

எப்பொழுதெல்லாம் நீங்கள் சில அனுபவங்களைப் பெறுகிறீர்களோ, ஆன்மீக ரீதியாகவோ, வேறெதுவோ, புத்திசாலித்தனமோ அல்லது வேறெதுவோ, எப்போதெல்லாம் நீங்கள் ஏதாவது அனுபவம் பெறுகிறீர்களோ, நினைவில் வையுங்கள். நீங்கள் அதுவல்ல. அது உணர்வு நிலையில் அடங்கியுள்ள ஒன்று. எல்லா நினைவுகளும் விடப்பட வேண்டும். அப்போது தான் மனம் மறையும். மனம் என்பது வேறொன்றுமில்லை. எண்ணங்களின் தொகுதிதான்; எண்ணங்களின் திரட்டு தான் மனம்.

வெறுமனே பாருங்கள். உங்கள் மனம் என்பது என்ன? மனம் என்ற வார்த்தையின் அர்த்தம் என்ன? துல்லியமாக அது எதை உள்ளடக்கியுள்ளது? உங்களது அனைத்து அனுபவங்களும், அறிவு, கடந்தகாலம் இவற்றின் கூட்டமைப்பு தான் உங்கள் மனம். நீங்கள் உலகியல் ரீதியிலான மனதைப் பெற்றிருக்கலாம். ஆன்மீக ரீதியான மனதைக் கொண்டிருக்கலாம். அவையெல்லாம் ஒரு பொருட்டே அல்ல; மனம் என்பது மனம் தான். ஆன்மீக ரீதியிலான மனமும் லௌகீக மனதுக்குச் சமமானது தான். நாம் மனதைக் கடந்து அப்பால் செல்ல வேண்டும்.

உள்ளடக்கத்தில் நம்பிக்கை வைக்காதீர்கள். அந்த எண்ணங்களைக் கவனியுங்கள், அதைக் கடக்க விட்டு விடுங்கள். ஆம். சில சமயங்களில் உள்ளிருக்கும் எண்ணம் அதிகம் மயக்குவதாய், அதிகம் மனோவசியம் செய்வதாயிருக்கும். அதை ஒருவன் பற்றிக் கொள்ள விரும்புவான். ஆன்மீகத்திலிருக்கும் போது, ஆன்மீகம் என்று சொல்லிக் கொள்வதில் இருக்கும் போது, அனுபவங்கள் நிகழத் தொடங்குகின்றன. "நான் அடைந்து விட்டேன்" என்று நம்பவாவது தொடங்குவீர்கள், மற்ற அனைவரும் இருளில் துழாவிக் கொண்டு இருக்கும் போது எனக்கு மட்டும் ஒளி கிடைத்துவிட்டது என்று சொல்வீர்கள்.

இது ஒரு புதிய வகையான இருள், அவ்வளவு தான், ஏனெனில், நீங்கள் மீண்டும் பிடித்துக் கொள்ளப்பட்டு எண்ணத்தால் இழுத்துக் கொள்ளப்பட்டுவிட்டீர்கள். எண்ணம், உணர்வு இவை இரண்டும் நினைவில் வைத்துக் கொள்ளப்பட வேண்டியவை. உணர்வு உள்ளடக்கம் ஒரு போதும் உணர்வு நிலையாகாது. உணர்வு நிலை என்பது ஒரு தூய கண்ணாடி, அது வெறுமனே பிரதிபலிக்கிறது.

இப்போது அதன் முன் ஒரு அழகான பெண் நின்றால் என்ன! அசிங்கமான பெண் நின்றால் என்ன! என்ன ஆகிவிடப் போகிறது? அது முக்கியம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? கண்ணாடி அந்த அழகான பெண்ணின் பிரதிபலிப்பைப் பிடித்துக் கொள்ள விரும்பும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இதோ ஓர் அழகான பெண் அவளை விட்டு விடாதே: பிடித்துக் கொள் என்று அது நினைக்குமா? அல்லது அதிதமான விகாரமான பெண் அங்கிருந்தாலும் அந்தக் கண்ணாடிக்கு துடிப்பு குறைந்து விடுமா? அது ஒரு பொருட்டல்ல. கண்ணாடி பாதிக்கப்படாமலேயே இருக்கிறது. எவையெல்லாம் இருக்கின்றனவோ, அவற்றை வெறுமனே பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றது. இந்த நிலைதான் உண்மையான ஆன்மீகம். இன்பத்தை நுகர வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அது உங்கள் உரிமை. ஆனால் நீங்கள் நினைவில் கொள்ள வேண்டியது, "இவை எல்லாவற்றிற்கும் நான் சாட்சி தான்", Witness என்பதை நினைவில் வைத்திருந்தால், நீங்கள் எப்போதும் ஏமாற்றப்பட மாட்டீர்கள். இல்லாவிட்டால் மீண்டும் மீண்டும் நீங்கள் ஏமாற்றப்படலாம்.

- நன்றி : ஞானப்புரட்சி -1
(கண்ணதாசன் பதிப்பகம்)

எவையெல்லாம் தோன்றியதோ அவையெல்லாம் மறையப்பட வேண்டியவை. அவற்றின் மீது கொள்ளும் விருப்பு வெறுப்பே அவற்றின் மீது நாம் கொள்ளும் பற்றும் பந்தமும் ஆகும். நமக்கு ஏற்படும் அனுபவங்களும் உணர்வுகளும், அவை தோன்றியதுபோல் மறைவதே இயற்கை. நமக்கு பிடித்த அனுபவங்களையும், உணர்வுகளையும் தக்க வைக்க விரும்புவதும், பிடிக்காத அனுபவங்களையும் உணர்வுகளையும் விலக்கிவிடப் போராடுவதுமே நமக்கு பிரச்சினையை கொண்டு வருகிறது. நம் விடுதலைக்கு விரோதமாக இருக்கிறது.

அப்படி என்றால் நமது அனுபவங்கள் மீதும் உணர்வுகள் மீதும் உள்ள விருப்பு வெறுப்பை எவ்வாறு கையாளுவது?

ஒரு கண்ணாடியை எடுத்துக்கொண்டால் அது எல்லாவற்றையும் வெறுமனே பிரதிபலிக்கும். எந்த பிம்பத்தையும் அப்புறப்படுத்தவோ, பிடித்து வைக்கவோ போராடாது. அதுபோல் நமக்கு ஏற்படும் எல்லா உணர்வுகளையும், அனுபவங்களையும் நமது விருப்பு வெறுப்புகளால் போராடாமல் அதன்போக்கில் இயங்க விட வேண்டுமா? ஆமாம்.

சரி அவைகள் மீது கொள்ளும் விருப்பு வெறுப்புகளை எவ்வாறு அப்புறப்படுத்துவது? அவையும் நம் கட்டுப்பாட்டில் இல்லை. உணர்வுகள் மற்றும் அனுபவங்கள் மீது கொள்ளும் விருப்பு வெறுப்புகளுமே மனம் என்னும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிம்பங்களே என புரிந்துகொண்டால் போதும்.

அவைகளும் அவை போக்கில் மறைந்து விடும். நமது போராட்டங்களும் மனதில் பிரதிபலிக்கும் பிம்பம் என்பதை புரிந்து கொள்ளும் போது, தாமாக இயங்கும் விடுதலையின் இயக்கத்தில் நமது குறுக்கீடுகளும் தாமாக மறைந்துவிடும்.

## கடிதம்

ஒரு உணவு விடுதிக்குச் சென்ற போது அங்கிருந்த புத்தக ஸ்டாலில், தற்செயலாக ஸ்ரீபகவத் அய்யா அவர்கள் எழுதிய "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" என்ற புத்தகத்தைக் காண நேர்ந்தது.

நான் சில தியான இயக்கங்களில் பயிற்சி பெற்றிருந்ததால், இப்புத்தகத்தில் என்னதான் எழுதப்பட்டிருக்கிறது என்று பார்க்கலாம் என்று வாங்கிப் படித்ததில், எல்லா சாஸ்திரங்களும், ஞானிகளும், தியான இயக்கங்களும் தாங்கள் உணர்ந்த வழியில் விவரித்திருந்ததை, வித்தியாசமான கோணத்தில் மிக எளிமையாக சொல்லப்பட்டிருந்ததை கண்டு வியப்புற்றேன்.

மேலும் எனக்கு கிடைத்த மற்ற புத்தகங்களையும் படித்து முடித்ததில், நடைமுறையின் யதார்த்தமான வாழ்விற்கு, ஒரு தெளிவும், புரிதலும் ஏற்பட்டுள்ளது.

இதற்கு முன், இந்த அரிய வாழ்வில், தெய்வீக சக்தியை உணர்ந்து கொள்ளாமல் வீணாக அழிந்து கொண்டிருக்கிறதே என்ற வருத்தமும், வீடு, அலுவலகம் முதலியவற்றைத் துறந்து முழுவதுமாக ஆன்மீக இயக்கத்தில் பங்கு பெற்று, எதை அடைந்தால் நமது வாழ்வின் நோக்கம் பூர்த்தியாகுமோ, அதை அடைவதற்கு நடைமுறை யதார்த்தங்கள் தடையாக உள்ளதே என்ற வருத்தமும் இருந்து கொண்டிருந்தது. ஆனால் தற்போது ஸ்ரீ பகவத் அய்யாவின் நூல்கள் எனக்கு ஒரு புதிய பாதையை காண்பித்திருக்கிறது.

அய்யா அவர்களின் தரிசனத்தைப் பெற ஆவலாக இருக்கிறேன்.

நன்றி.

**K.P. வேலுமணி**
பெருந்துறை - 638 052.
9942233088.

## சிங்கப்பூரில் பகவத் ஐயாவின் ஞான முகாம்





2014 நவம்பர் மாதம் 21, 22, 23 தேதிகளில் சிங்கப்பூரில் நடைபெற்ற பகவத் ஐயாவின் சிறப்புரை கூட்டங்களிலும் ஞான முகாமிலும் கலந்துகொண்டவர்கள்



சிங்கப்பூரில் நடைபெற்ற ஞான முகாமை ஏற்பாடு செய்த நன்பர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா

இடமிருந்து வலம் ஐயாவுடன் அமர்ந்திருப்பவர்கள் : திரு. V. A. P. சரவணன், திரு. கார்த்திகேயன், திரு. ராம்குமார், நமது ஸ்ரீ பகவத் ஐயா, திரு. கணேசன், திரு. இராதாகிருஷ்ணன், திரு. பாலமுருகன்
நின்றுகொண்டிருப்பவர்கள் : திரு. பிரபாகரன், திரு. சிவசுப்ரமணியன், திரு. குணசேகரன், திரு. ஜீவமணி

## பெருந்துறையில் 3 நாள் ஞான முகாம்

இந்த ஞான முகாம் ஈரோடு மாநகரத்திலிருந்து கோயமுத்தூர் செல்லும் வழியில் 20 கி.மீட்டர் தூரத்தில் உள்ள பெருந்துறை நகரை அடுத்து, பெருந்துறையிலிருந்து குன்னத்தூர் செல்லும் சாலையில் 5 கி.மீட்டர் தூரத்தில் அமைந்துள்ள சீனாபுரம் "கொங்கு வேளாளர் பாலிடெக்னிக் கல்லூரி" வளாகத்தில் நடைபெற உள்ளது.

நாள் : 24-1-2015 சனி காலை 4-00 மணி முதல் 26-1-2015 திங்கள் மாலை 3-00 மணி வரை

கலந்துகொள்ளும் ஆண்கள் மற்றும் பெண்கள் அனைவருக்கும் தனித்தனியாக தங்கும் வசதிகள் மற்றும் உணவு வசதிகள் செய்யப்பட்டுள்ளது.

நிகழ்ச்சி நிரல் : 24-1-2015 மாலை 4-00 மணி முதல் வகுப்புகள் ஆரம்பிக்கப்பட உள்ளது.

பஸ் மூலம் வரும் அன்பர்கள் ஈரோடு வந்து பெருந்துறை வரலாம்.

சேலத்திலிருந்து நேரடியாக கோவை மார்க்கம் பைபாஸ் ரைடர் பேருந்துகளில் பெருந்துறை வரலாம்.

இரயிலில் வரும் அன்பர்கள் ஈரோடு இரயில் நிலையத்திலிருந்து, ஈரோடு பஸ் நிலையம் வந்து, பேருந்து மூலம் பெருந்துறை வரலாம்.

பெருந்துறை பஸ் நிலையத்திலிருந்து டவுன் பஸ்கள் (7, 7-A, 7-LSS, P-10A, 12-D, CSBS) மூலம் சீனாபுரம் கொங்கு வேளாளர் பாலிடெக்னிக் கல்லூரி நிறுத்தத்தில் இறங்க வேண்டும்.

இட வசதிக்கேற்பவும், உணவு மற்றும் தங்கும் வசதிகள் அளிப்பதற்கும், ஞான முகாமில் கலந்து கொள்ளும் அன்பர்களின் எண்ணிக்கையை இறுதி செய்வதற்காக 16-1-2015-ம் தேதிக்குள் முன்பதிவு செய்து கொள்வது மிகவும் அவசியம்.

நன்கொடை ரூ.700/-

முன்பதிவு மற்றும் விபரங்களுக்கு

திரு. அகமது பாட்சா, 98422-54148, திரு. கந்தசாமி, 94422-25235

திரு. கே.பி. வேலுமணி, 99422-33088, திரு. அருண், 90956 23111

## 2015 ஆம் வருட மாத காலண்டர்

2015 ஆம் வருட மாத காலண்டர் பகவத் ஐயா அவர்களின் வண்ணப்படங்களுடன் சேலம் ஏற்காடு ஞான முகாம் மற்றும் கோவை ஞான முகாமில் கலந்து கொண்டவர்களின் குரூப் போட்டோவையும் இணைத்து ஞானத் தெளிவை கொடுக்கும் ஐயாவின் வாசகங்களையும் சேர்த்து மிகவும் பயன்தரும் வகையில் நெரூர் ஞான முகாமில் வெளியிடப்பட்டுள்ளது.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையிலும் காண்பவர் மனதிற்கு தெளிவைக் கொடுக்கும் வகையிலும் அமைந்துள்ளது.

முன்பதிவு செய்தவர்களுக்கு மட்டுமல்லாது சற்று கூடுதலாகவே அச்சிடப்பட்டுள்ளது. எனவே ஐயாவின் கருத்துக்களை மற்றவர்களுக்கும் தெரிவிக்க விரும்புபவர்கள் அனைவரும் தாங்கள் வாங்கி பயன்பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக அளித்து அவர்களும் பயன் பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.



Sri Bagavath Ayya

ஒரு காலண்டர் விலை ரூ.100/-

<u>பணம் அனுப்பும் வழிகள் :</u>

Credit Card or Debit Card மூலமாக www.pravaagam.org என்ற இணையதளத்தின் மூலமாக செலுத்தலாம்.

"Pravaagam Publications" என்ற பெயருக்கு Cheque (or) D.D. (or) M.O, அனுப்ப வேண்டிய முகவரி பிரவாகம் பப்ளிகேஷன்ஸ், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636003.

<u>நேரடியாக Bank A/c ல் செலுத்துபவர்கள்</u>

HDFC Bank A/c. No.15908730000243 "Pravaagam Publications" IFSC : HDFC0001590 என்ற கணக்கு எண்ணில் செலுத்தலாம்.

# "வாழ்க்கைத் தத்துவம்"

ஜென்கதை

செல்வந்தரான வியாபாரி ஒருவர் இருந்தார். அவர் தனக்கு பிடித்த குரு ஒருவரிடம் அடிக்கடி செல்வது வழக்கம்.

குருவின் மடத்திற்கு அவ்வப்போது நிதி உதவியும் அளித்துவந்தார். ஒரு நாள் அவர் தன் குருவிடம் தன் பிரச்சினையை கூறி வழி கேட்டார்.

"நான் இவ்வளவு பணம் சம்பாதிக்கிறேன். இருந்தும் எனக்கு நிம்மதியோ, மகிழ்ச்சியோ இல்லை. எப்போதும் பதட்டமாகவே இருக்கிறது. எனக்கு நிம்மதி ஏற்பட ஒரு வழி சொல்லுங்கள்" என்றார்.

"எதற்காக பணம் சம்பாதிக்கிறாய்?" என்றார் குரு.

"வாழ்க்கைக்கு பணம் முக்கியமானது. மேலும் என் குடும்பத்தினருக்கு என் மீது அளவில்லாத பாசம், கொள்ளை அன்பு. அவர்களின் நலனுக்காகத்தான் பணம் சேர்க்கிறேன். அவர்கள் மீது அளவு கடந்த பற்று வைத்திருக்கிறேன்" என்றார்.

"பணம் வாழ்க்கைக்கு தேவையான கருவி. அவ்வளவு தான். அதன் மீது பற்று இல்லாமல் சம்பாதி, குடும்ப உறுப்பினர்களுக்கு தேவையானதை செய். அது உன் கடமை. அதையும் பற்றில்லாமல் செய். பற்றை விட்டால் நிம்மதி தானாக வரும். நீ பணத்தின் மீதும், குடும்பத்தினர் மீதும் உள்ள பற்றை முதலில் விடு" என்றார் குரு.

அந்த செல்வந்தர், "என்னிடம் பணம் சேர்ந்து விட்டது. எனவே பணத்திற்காக அலைவதை வேண்டுமானால் விட்டு விடலாம். ஆனால் என் குடும்பத்தினர் என் மீது அளவுகடந்த பாசம் வைத்திருக்கிறார்கள். நான் இல்லாமல் அவர்களால் அரை கணம் கூட இருக்க முடியாது. அப்படிபட்டவர்கள் மீது எப்படி பற்றில்லாமல் இருக்க முடியும்?" என்றார்.

"அப்படியா?

அதை பரிசோதித்து பார்த்து விடலாமா?" என்றார் குரு.

செல்வந்தரும் ஏற்றுக்கொண்டார் அதை.

சவம் போல் அசைவின்றிக் கிடக்கும் யோக வித்தை ஒன்றை அவருக்கு சொல்லிக் கொடுத்த குரு, வீட்டுக்குச் சென்று அதைப் பிரயோகிக்கச் சொன்னார்.

அதே போல் செல்வந்தரும் வீடு சென்று இறந்தது போல் யோகாசனத்தில் படுத்து கிடந்தார்.

மனைவி, பிள்ளைகள், உறவினர் யாவரும் அவர் இறந்து விட்டதாகவே எண்ணி கதறி அழுதனர்.

அப்போது, குரு செல்வந்தரின் வீட்டிற்குச் சென்றார்.

அவர்களிடம் சொன்னார்.

"உங்களில் யாராவது ஒருவர் உயிரைத் தர முன் வந்தால் போதும். இப்போதும் இவரைப் பிழைக்க வைக்க என்னால் முடியும்" என்றார். அதுவரை கதறி அழுதுக் கொண்டு இருந்தவர்கள் ஒவ்வொருவராக பின் வாங்கத் தொடங்கினார்கள்.

ஒவ்வொருவரும் தான் தொடர்ந்து உயிர் வாழ வேண்டியதன் அவசியத்தைச் சொல்லி நகர ஆரம்பித்தார்கள். கடைசியாக எஞ்சியது செல்வந்தரது மனைவி மட்டுமே.

அந்த மனைவியோ,

"அவருக்காக யாரும் உயிர் விட வேண்டாம். நாங்கள் அவர் இல்லாமலே வாழப் பழகிக் கொள்கிறோம்" என்றாள்.

யாருக்காகவும், எதற்காகவும் எதுவும் நிற்கப்போவதில்லை. அவரவர் வாழ்க்கையை அவரவர் வாழ்ந்துதான் ஆகவேண்டும் என்பதை தெரிந்துகொண்டார்

இது தான் வாழ்க்கை. நாம் கொண்டு வந்தது எதுவுமில்லை. கூட வரப்போவதும் எதுவுமில்லை. எனவே எதன் மீதும் அளவு கடந்த பற்று கொண்டு நிம்மதியை இழக்க வேண்டியது இல்லை.

குடும்பத்தை - மனைவியை, குழந்தைகளை, பெற்றோர்களைப் பாதுகாப்பதும், பராமரிப்பதும் நம் கடமையே. அதிலிருந்து நாம் எங்கும் தப்பி ஓட முடியாது. அது நெறியும் ஆகாது. எனவே - அதன் பொருட்டு செல்வத்தை ஈட்டுவதும் அவசியமாகிறது.

ஆனால், பணத்தின் பின்னாலேயே அலைவதும், அதற்காக எதையும் செய்யத் துணிவதும், யார் மீதும் அளவு கடந்த பற்று வைப்பதும், சொந்தம் கொண்டாடுவதும் – தேவையற்றது.

"எதற்காகவும் எதுவும் நிற்கப்போவதில்லை"



ஜென் கதை - "வாழ்க்கை தத்துவம்"

**Registration Number of the News Paper TNTAM/2014/57698**


*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com


Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555